இந்தப் பூர்ணரூபத்தையே ஸைஃபருக்கும் சொல்வதுதான் ஆச்சர்யம் ! 'பரீக்ஷையில் கோழி முட்டை' என்கிறோம். பூர்ணமும் பிள்ளையார்தான், சூன்யமும் பிள்ளையார்தான், உள்ளது, அல்லது எல்லாம் பரமாத்மாதான்', என்கிற மஹா தத்துவத்தையே சுழி காட்டுகிறது. கார்யத்தை ஸைஃபர் பண்ணிக் கொண்டு வருகிறவனே, "என்னடா சுழி" என்ற ப்ரக்ருதத்திலும் (நடைமுறையிலும்) சொல்கிறோம். கையிலிருக்கிற மோதகத்தில் தித்திப்புப் பூர்ணத்தை வைத்துக் கொண்டு பூர்ணத்வத்தை 'டெமான்ஸ்ட்ரேட்' பண்ணும் பிள்ளையாருக்கே சுழி போடுகிறோம். இந்தச் சுழி மற்றச் சுழியையெல்லாம் முழுசாகப் பண்ணிவிடும்.

வட்டமான வளைசல் கொம்போடு ஆரம்பிக்கிற பிள்ளையார் சுழி கொஞ்சம்கூட வளையாத நேர்கோட்டோடு முடிகிறது. பிள்ளையார் பூர்ணம், சூன்யம் இரண்டுமாக ஆனாற்போல் வக்ரமானதும் அவர்தான், ஆர்ஜவமானதும் (நேரானதும்) அவர்தான் என்பது தாத்பர்யம். வக்ர குணத்துக்கு நேரெதிரானதை ஆர்ஜவம் என்பார்கள். தமிழில் இதைத்தான் **நேர்மை** என்பது. இங்கிலீஷிலும் straightness, straight - forward என்கிறார்கள். குணம் குணஹீனம் எல்லாம் ஒரே நிர்குண பரமாத்மாவின் வேஷங்கள்தான்.

'உ' என்பது ப்ரணவத்தின் இரண்டாவதான நடு அக்ஷரம் அ-உ-ம் என்ற மூன்றும் சேர்ந்தே 'ஓம்'காரமான ப்ரணவம். விஷயம் தெரிந்தவர்கள் இதை இங்கிலீஷில் Om என்று எழுதாமல் Aum என்றே எழுதுவார்கள். 'அ' என்பது ஸ்ருஷ்டி: ப்ரம்மா. 'உ' என்பது பரிபாலனம் ; விஷ்ணு. 'ம்' ஸம்ஹாரம்: ஈச்வரன். த்ரிமூர்த்திகளும் தோன்றியது ஏக பராசக்தியில்தான். அதனால் அவள் ப்ரணவ ஸ்வரூபிணி. ஆனாலும் ஓமை தேவீப்ரணவம் என்று சொல்வதில்லை. 'உமா' என்பதே தேவீ ப்ரணவம் என்பார்கள். அ-உ-ம என்ற சப்தங்களே மாறி 'உமா'வில் உ-ம-அ என்று இருக்கின்றன அல்லவா ? ஓமில் ஸ்ருஷ்டி பீஜமான 'அ' முதல் எழுத்தாயிருக்க. 'உமா' விலோ ஸ்திதி(பரிபாலன) பீஜமான "உ" என்பது முதல் எழுத்தாயிருப்பதால்தான், அன்போடு ரக்ஷித்து, காத்து, பரிபாலனம் பண்ணும் அம்பாளின் ப்ரணவம் 'உ'வில்தான் ஆரம்பிக்க வேண்டுமென்று காரணம் சொல்லி, இதனாலேயே 'உமா' என்பதை அம்பாளுடைய ப்ரணவமாகக் கூறுகிறார்கள்.

அ-உ-ம வில் ஹ்ருதயம் மாதிரி நடுவேயிருப்பது 'உ', அதுவே கருணாமயமாகக் காப்பாற்றுகிற தேவீ ப்ரணவத்தில் ப்ரதம

ஸ்தானத்திலிருக்கிறது. ப்ரணவ ஸ்வரூபப் பிள்ளையார் 'அ'வும் 'ம'வும் சேராமல் இந்த 'உ' காரமாக மட்டுமே பிள்ளையார் சுழியில் இருப்பதைப் பார்க்கும் போது ஒன்று தோன்றுகிறது. எப்படி ? அவளும் ரக்ஷிக்கிற 'உ' வுக்கு பின்னாடியாவது ஸம்ஹார 'ம', ஸ்ருஷ்டி 'அ' இவற்றையும் வைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் பிள்ளையோ எப்போது பார்த்தாலும் எல்லோரையும் ரக்ஷிப்பது தவிர வேறு ஜோலியே வைத்துக் கொள்ளாத பூர்ண கருணாமூர்த்தியாக இருந்து கொண்டு 'உ' ஒன்றேயே நின்றுவிடுகிறார்.

ப்ரணவத்தில் 'உ' விஷ்ணுவின் ரூபம். உமாவும் விஷ்ணு ரூபிணியாக, நாராயண ஸஹோதரியாக, "விஷ்ணுமாயா விலாஸினி"யாக 'நாராயணி" என்றே பெயர் படைத்த வளாயிருக்கிறாள். பிள்ளையாரைப் பற்றி ஸகலரும், ஸகல கார்ய ஆரம்பத்திலும் சொல்லும் ச்லோகத்திலும் "சுக்லாம்பரதரம் **விஷ்ணும்**" என்றே வருகிறது. (இங்கே விஷ்ணு என்றால் ஸர்வ வியாபகர் என்று அர்த்தம்) 'உ' என்பது சிவ - சக்தி புத்ரனை விஷ்ணுவோடும் ஸம்பந்தப்படுத்தி, சைவ வைஷ்ணவத்தை ஸமரஸம் பண்ணி விடுகிறது !

வளைசலும் நேர்கோடுமாக இருக்கிற பிள்ளையார் சுழியில் நிறையத் தத்வார்த்தம் இருக்கிறது. சக்ராகாரமாக எந்த ஒன்று சுற்றினாலும் அதற்கு மத்தியில் அதற்கு ஆதாரமாக, அச்சாக (axis-ஆக) நேரான (straight - ஆன) ஒன்று இருந்தாகவேண்டும். விஷ்ணு தன் விரலேயே நேராக நிமிர்த்துக் கொண்டு அதிலேதான் சக்ராயுதத்தைக் கோத்துக் கொண்டு சுற்றுகிறதாகவே விக்ரஹங்களில் காட்டியிருக்கும். சுற்றச் சுற்றப் பொறிப் பொறியாகக் கொட்டுகிற கார்த்திகை வாணமானாலும் ஸரி (இது ஒளி), விரலிலே மாட்டிக் கொண்டு சுற்றிச் சுற்றி டபடபவென்று அடிக்கிற கிரிச்சட்டியானாலும் ஸரி (இது ஒலி) - இதுகளின் வட்டமான சுழற்சிகளுக்கு ஆதாரமாகக் கையோ, குச்சியோ எதுவோ ஒன்று நேர்கோடாக இருக்க வேண்டியிருக்கிறது. யுனிவர்ஸில் லோகங்களெல்லாம் ஸர்குலராகத்தான் சுற்றிக் கொண்டிருக்கின்றன என்கிறபோதும் இவற்றுக்குக் கூட straight - line ஆக ஒரு ஆதார axis நம் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் energy (சக்தி) ரூபத்தில் இருக்கத்தான் வேண்டும். வட்டமாகச் சுற்றுகிற ஸகலப் ப்ரபஞ்சத்தையும் அதற்கு ஆதார சக்தியான கோட்டையும் சேர்த்துத்தான் பிள்ளையார் சுழியில் வட்டபாகமாகவும் நேர்கோட்டு பாகமாகவும் போடுகிறோம்.

எங்கேயோ படித்த, அல்லது கேட்ட ஞாபகம் : எனர்ஜி உண்டாகிறதே பிள்ளையார் சுழி ரூபத்தில்தான் என்று. தாரை கொட்டி அதிலிருந்து எலெக்ட்ரிஸிடி எடுக்கிறபோது ரொடேஷனிலிருந்து (வட்டத்திலிருந்து) நேர் கோடாகத்தான் மின்ஸாரம் புறப்படுகிறது என்று எடுத்துக் காட்டியிருந்தது. பிள்ளையார் சுழியில் கொம்பு தான் ரொடேஷன் ; கோடு அதிலிருந்து சக்தி உத்பவம். இந்த இரண்டையும் சிவ- சக்தி ஸ்வரூபமான நாத பிந்துக்களாகக் கூடச் சொல்லிக்கொண்டு போகலாம். அதெல்லாம் ஸூக்ஷ்மமான விஷயம்.

ஆரம்பித்த இடத்துக்கே வந்து முடிந்துவிடுகிற வட்டம் ஏகமான பிரம்மத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம். வட்டத்தில் ஆரம்பித்து அரை வட்டத்துக்கு அப்புறம் நேர்கோடாகிற பிள்ளையார் சுழி ஏகமான பிரம்மத்தை ஸங்கேதமாகக் காட்டிவிட்டு அதிலிருந்து அநேகமான ஸ்ருஷ்டி தோன்றியதையும் சேர்த்துத் தெரிவிக்கிறது என்று சொல்லலாம். பிரம்மமும் பூர்ணம், ப்ரபஞ்சமும் பூர்ணம். ப்ரம்ம பூர்ணத்திலிருந்து ப்ரபஞ்ச பூர்ணம் உண்டாயிற்று என்று உபநிஷத்தின் ஆரம்பத்தில் சொல்கிறோம். ஆரம்ப ஸ்வாமியின் அடையாளமாக எதன் ஆரம்பத்திலும் போடும் பிள்ளையார் சுழி பிரம்ம பூர்ணத்தை வளைசல் கொம்பாலும், ப்ரபஞ்ச பூர்ணத்தை நேர் கோட்டாலும் காட்டி, முதலில் கொம்பு அப்புறம் கோடு என்பதால் பிரம்மத்திலிருந்துதான் ப்ரபஞ்சம் உண்டாச்சு என்றும் தெரிவிக்கிறது.

கொம்பு, கோடு என்று இரண்டு வார்த்தைகள் சொன்னேன். வேடிக்கையாக இரண்டுமே பிள்ளையாரின் தந்தத்துக்கு பேராயிருக்கின்றன. 'ஏக தந்தர்' என்பதை 'ஒற்றைக் கொம்பன்' என்பார்கள். 'பெரும்பாரக் கோடும்' 'கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே' என்றெல்லாம் அவ்வைப்பாட்டி சொல்லும் போது 'கோடு' என்றாலும் தந்தந்தான். எப்போதும் குழந்தையாயிருக்கிற ஸ்வாமியை வேண்டிக் கொண்டதாலேயே குழந்தைப் ப்ராயத்தில் கிழவியாகிவிட்ட அவ்வை சொன்ன 'கொடுவினை' என்பதுதான் ஜன்மாந்தர பாபங்களான பிராரப்த கர்மா. அந்தக் கர்மா எப்படியெப்படி நம்மைப் பழிவாங்க வேண்டும் என்று பிரம்மா நம் தலையில் எழுதியிருக்கிறானென்று சொல்லி, இதை பிரம்மலிபி என்பார்கள். 'தலைச்சுழி' என்பதும் இதைத்தான். இந்த தலைச் சுழியையும் சுழித்து விடுவது பிள்ளையார் சுழி. ''கோடாயுதத்தால் கொடுவினை களைந்தே''

**எழுத்துப் பணியில் விநாயகர் தொடர்பு**— நாம் போடுகிற பிள்ளையார் சுழி ஒரு சின்ன எழுத்தின் மூலம் விக்னேச்வரரை ஸங்கேதமாகத்தான் காட்டுகிறது ; வெளிப்படையாகப் பிள்ளையார் பேரைத் தெரிவிக்கவில்லை. ஆனால் பழங்காலச் சுவடிகளைப் பார்த்தால் அவற்றின் ஆரம்பத்தில் வெளிப்படையாகவே **ஸ்ரீ கணாதிபதயே** நம: என்று போட்டிருக்கும்.

எந்தக் கார்யத்துக்குமே முதலில் கணபதிப் பிரஸாதத்தைப் ப்ரார்த்திக்க வேண்டுமென்றாலும், இந்த எழுத்து வேலையில் மட்டும் அவருக்கு எதனால் தனி முக்யத்வம் என்று யோசித்துப் பார்த்தேன். 'இங்கே முதலில் ஸரஸ்வதியைச் சொல்லாமல் பிள்ளையாரை ஏன் சொல்ல வேண்டும் ? என்று நினைத்தேன். அவரைச் சொல்லும் போதும் விநாயகர், விக்நேச்வரர், வக்ரதுண்டர், ஹேரம்பர் முதலான மற்ற எந்தப் பெயரையும் போடாமல் ''கணாதிபதி'' என்றே எந்தச் சுவடியிலும் போட்டிருப்பது ஏன் என்று யோசித்தேன். வித்வான்களுடன் 'டிஸ்கஸ்' பண்ணினதில் ஒரு மாதிரி புரிந்தது. ''கண'' என்ற வார்த்தைக்கு உள்ள அனேக அர்த்தங்களில் பாஷா ஸம்பந்தமாகவே ஒன்று இருக்கிறது. ஒரே விதிக்குக் கீழே வருகிற எல்லா தாதுக்கள் அல்லது வார்த்தைகளை ஒரு ''கணம்'' என்று தொகுத்து வியாகரணத்தில் கொடுத்திருக்கிறது. இந்தக் கணங்களுக்கெல்லாம் அதிபதிதான் கணாதிபதி. பரமேச்வரனுடைய பூத கணங்களுக்குத் தலைவரானதால் கணபதி, கணாதிபதி, கணேசர், கணநாதர் என்றெல்லாம் அவருக்குப் பெயர் இருப்பதோடு, பதஸமூஹங்களுக்கெல்லாம் தலைவர் என்ற அர்த்தத்திலும் இப்படிப் பெயர் பெற்றிருப்பதால்தான் **கணாதிபதயே** நம: என்று போட்டு எழுத ஆரம்பித்திருக்கிறார்கள்.

விநாயகர் ப்ரணவ ஸ்வரூபம் என்றால், அந்த ப்ரணவம்தானே ஸகல சப்தங்களுக்கும் வார்த்தைகளுக்கும் ஆதாரம் ? அதனால் அவரைப் பதஸமூஹங்களின் அதிபதியாகக் கொண்டு, எழுத ஆரம்பிக்கும்போது முதலில் நமஸ்காரம் தெரிவிப்பது பொருத்தந்தான்.

இன்னொரு காரணங் கூடச் சொல்லலாம். அவரே பெரிய 'எழுத்தாளராக' இருந்திருக்கிறார் ! லோகத்திலேயே பெரிய புஸ்தகம் எது என்றால் மஹாபாரதம்தான் என்று எவரும் சொல்வீர்கள். யாராவது ஏதாவது நீட்டி முழக்கினால் 'அந்த மஹாபாரதெல்லாம் வேண்டாம்'' என்கிறோம். லக்ஷம் கிரந்தம்

கொண்டது பாரதம். பஞ்சமோ வேத: - ஐந்தாவது வேதம் என்று அதற்குப் பெயர். மற்ற நாலு வேதங்கள் "எழுதாக் கிளவி" - எழுத்தில் எழுதப்படாமல் காதால் கேட்டு மனப்பாடம் பண்ணியே ரக்ஷிக்கப்பட வேண்டியவை. ஐந்தாவது வேதமான பாரதம்தான் எழுதி வைக்கப்பட்டது. வேத வியாஸ பகவான் சொல்லச் சொல்ல அதை ஸாக்ஷாத் மஹாகணபதிதான் எழுதினார். அதனால் அவர் எழுத்தாளராகிறார் (ஸ்ரீ பெரியவர்களின் இந்த உரையாடலில் கலந்து கொண்ட ஒரு பக்தர், எழுத்தாளர் என்பது மூல ஆசிரியரைக் குறிக்குமென்றும், பாரதத்திற்கு வியாஸரே மூல ஆசிரியராக இருக்கப் பிள்ளையார் அவர் கூறியதை எழுத மட்டும் செய்ததால் அவரை 'எழுத்தர்' என்றே சொல்லலாமென்றும் கூறப் பெரியவர்கள் தொடர்கிறார்) பிள்ளையாரை எழுத்தாளரென்று சொல்லப்படாது என்றால் 'எழுத்தர்' என்று நிச்சயமாகச் சொல்லலாம். இங்கிலீஷில் Writer என்றால் original author, அதை எழுதிய copyist என்று இரண்டு அர்த்தமும் ஏற்படுகிறது. அதனால் பிள்ளையாரை writer என்று சொன்னால் எந்த ஆக்ஷேபணையும் வராது.

அவர் எழுத்தாளராயில்லாமல் எழுத்தராக மட்டுமிருந்தாலுங் கூடச் சுவடிகளில் முதல் நமஸ்காரம் பெற "க்வாலிஃபை" ஆனவர்தான். எப்படியென்றால், இந்தச் சுவடிகளை எழுதினவர்களும் ஒரிஜினல் ஆசிரியர்களில்லை. பழைய காலத்தில் க்ரந்தகர்த்தா ஒருவராகவும், அதை அவர் சொல்லச் சொல்ல எழுதுகிறவர் இன்னொருத்தராகவும் இருப்பார்கள். அப்போது ரொம்பப் படித்தவர்கள் கூட எழுதத் தெரிந்து கொண்டிருந்தார்கள் என்று சொல்ல முடியாது. Calligraphist என்கிறது போல, அழகாக எழுதுவதற்கென்றே "கணக்கர்"கள் என்று தனியாகச் சிலர் இருந்தார்கள். அந்த நாளில் எத்தனை பெரிய சாஸ்திரமானாலும் வித்யார்த்திகள் படித்தும் எழுதியும் அப்யஸிப்பது என்று இல்லை. குரு வாயினால் சொல்கிறதை சிஷ்யன் காதால் கேட்டு, திரும்பத் திரும்ப வாயால் தானும் சொல்லிச் சொல்லி, நெட்டுருப் போட்டு, எல்லாவற்றையும் மனப்பாடமாகவே கற்றுக் கொண்டார்கள். ஆனாலும் ஒரு காப்பாகச் சுவடி எழுதுவதற்கென்றே இருந்தவர்களைக் கொண்டு ஏட்டினாலும் எழுதி வைத்துக் கொண்டார்கள். இந்தக் கணக்கர்கள் பாரதத்தை எழுதிவைத்த கணாதிபதியையே தங்களுக்கு முதல்வராக நினைத்து முதல் நமஸ்காரம் தெரிவித்தது நியாயந்தான்.

தன் தந்தத்தையே உடைத்து அதை எழுத்தாணியாக வைத்துக் கொண்டு எழுதினார். யானையின் பெருமைக்கு முக்ய காரணமே

தந்தந்தான். ''இறந்தாலும் ஆயிரம் பொன்'' என்பது தந்த மதிப்பை வைத்துத் தான். அப்படிப்பட்ட தந்தத்தை லோகத்தில் தர்மநூல் தெரியணும், பரவணும் என்பதற்காக முறித்துப் பரம கருணையோடு விக்நேச்வரர் எழுதி வைத்தார். ப்ரணவ ஸ்வரூபமாகவும், தெய்வங்களில் அக்ரஸ்நானம் வஹிப்பவராகவும் சாக்ஷாத் பார்வதி — பரமேச்வராளின் ஜ்யேஷ்ட குமாரராகவும் இருக்கப்பட்ட மஹா கணபதி, தர்மப் ப்ரசாரம் பண்ணணும் என்பதற்காக வியாஸருக்குக் குமாஸ்தாவாக, scribe ஆகத் தம்மை குறைத்துக் கொண்டு பாரதத்தை எழுதினார்.

நடராஜாவே மாணிக்கவாசகர் பாடப்பாட எழுதினார். க்ருஷ்ணபரமாத்மாவும் ''கீத கோவிந்த''த்தில் (அதன் ஆசிரியரான) ஜயதேவரின் வேஷத்தில் வந்து ஒரு அடி எழுதினதாகக் கதை இருக்கிறது. ஆனால் அலுக்காமல் சலிக்காமல் லக்ஷம் ச்லோகம் எழுதின ஸ்வாமி பிள்ளையார்தான்.

இதனால் ''ஸ்ரீ கணாதிபதயே நம:'' என்று அவருக்குக் கும்பிடு போட்டுவிட்டு எழுதுகிற எவருக்கும் நிறுத்தாமல் தங்கு தடையில்லாமல் எழுதும் சக்தி வந்துவிடும்.

இவர் எழுதுகிற வேகத்துக்கு ஈடு கொடுத்து Compose பண்ண முடியாமல்தான் வியாஸர் ''பாரத குட்டு'' என்கிற அநேக சிக்கலான ச்லோகங்களை அங்கங்கே சொல்லி, இவரைக் கொஞ்சம் யோசனையில் நிறுத்தப் பண்ணி, அதற்குள் ஸ்ஹாரித்துக் கொண்டு மேலே சொல்ல ஆரம்பித்தார். நாம் பிள்ளையார் குட்டு (kuttu) குட்டிக் கொள்கிறோம் என்றால் வியாஸரோ பிள்ளையாருக்கே பாரதத்தில் குட்டு (guttu) வைத்தார். கன்னட பாஷையில் குட்டு என்றால் ரஹஸ்யம், மர்மமான புதிர். அநேக கன்னட வார்த்தைகளைத் தமிழ் எடுத்துக் கொண்டிருக்கிறது. அதனால்தான் தமிழில்கூட ''குட்டு உடைஞ்சுப்போச்சு'' என்கிறோம். பிள்ளையாருக்கே கொஞ்சம் புதிராக வியாஸர் பண்ணின ச்லோகங்களுக்குத்தான் ''பாரத குட்டு'' என்று பேர். ஆனாலும் அவர் ஞான ஸ்வரூபமானதால் அடுத்த க்ஷணமே அவருக்கு **''குட்டு உடைஞ்சிடும்''** மறுபடி எழுத ஆரம்பித்து விடுவார். அப்படிப்பட்டவரை ஸ்மரித்து விட்டு எழுதத் தொடங்கினால் எந்தச் சிக்கலான விஷயமும் நொடியில் தெளிவாகி, மேற்கொண்டு எழுதிக்கொண்டு போக முடியும் என்ற நம்பிக்கை ''ஸ்ரீ கணாதிபதயே நம:'' என்று ஆரம்பித்தால் உண்டாகும்.

**வலம்புரியானை வலம் புரிவோம்!** குட்டிக் கொள்வது, தோப்புக்கரணம் போடுவது, சிதறு தேங்காய் உடைப்பது, எருக்கும் அருகும் அர்ச்சனை பண்ணுவது, மோதகம் நிவேதிப்பது இவையெல்லாம் பிள்ளையார் வழிபாட்டில் விசேஷமாயிருக்கிறாற் போலவே அவரை ப்ரதக்ஷிணம் பண்ணுவதும் ஒரு விசேஷமாகும். பிள்ளையார் சுழி போடுகிறபோதும் ப்ரதக்ஷிணக் கிரமத்தில் தான் கொம்பை ஆரம்பிக்கிறோம்! பிள்ளையாரைக் குறைந்தது, மூன்று தடவை ப்ரதக்ஷிணம் பண்ணுவது வழக்கம். இருபத்தியொரு தடவை, நூற்றியெட்டு தடவை என்றெல்லாமும் சுற்றிச் சுற்றி வருவார்கள். பார்வதி பரமேச்வரர்களை ஸர்வ ப்ரபஞ்சமாகவும் புரிந்து கொண்டு வலம் வந்து பழம் (பலம்) பெற்ற விக்நேச்வரரை நாமும் வலம் வந்தால் ஸகல பலனும் பெறலாம். அவருடைய தொப்பை வயிறே உருண்டையாகப் ப்ரபஞ்சம் மாதிரிதானே இருக்கிறது? அவரை வலம் வருவதே நமக்கு பலமாகும் - தேஹபலம், புத்திபலம் எல்லாம்!

அவரே வலம்புரி விநாயகராகவும் இருக்கிறார். விக்நேச்வரர் மூர்த்தத்தில் ஏகப்பட்ட ரூப பேதங்களிருந்தாலும் பொதுவாக நாம் பார்க்கிற பிள்ளையார்கள் தும்பிக்கையை இடது பக்கமாக சுழித்துக் கொண்டிருப்பவையாக இருக்கும். அபூர்வமாகச் சில இடங்களில் வலது பக்கம் தும்பிக்கையைச் சுழித்துக் கொண்டிருப்பார். இவரைத்தான் வலம்புரி விநாயகர் என்பது. தக்ஷிணாவர்த்தமாக உள்ள சங்கை எப்படி வலம்புரிச் சங்கு என்று சிறப்பிக்கிறோமோ அப்படியே வலம்புரி விநாயகருக்கும் விசேஷமான அநுக்ரஹ சக்தி இருப்பதாக ஆகமத்தில் சிறப்பித்திருக்கிறது. இப்படித் தும்பிக்கை வலமாகச் சுழித்திருக்கிறபோதுதான் (இது பிள்ளையாரே போடும் சுழி, தம்முடைய ஒரு அங்கத்தாலேயே போடுகிற சுழி!) அவருடைய வாயின் வலது ஓரத்தில் ஆரம்பித்து, கன்னம் மஸ்தகம் (சிரஸ்) இவற்றைச் சுற்றிக் கொண்டு, இடது பக்கம் தும்பிக்கை வழியாக இறங்கி, அதன் சுழித்த முடிவுக்கு வந்தால், அந்த அவுட்லைன் க்ரந்தாக்ஷர 'ஓம்' (தமிழ், ஓ' மாதிரி) இருக்கும். இடது பக்கம் தும்பிக்கையைச் சுழித்த பிள்ளையார் ரூபத்தில் ப்ரணவ ஸ்வரூபம் கிடைக்காது. இது வலம்புரியின் விசேஷம்.

வலம்புரி விநாயக க்ஷேத்ரங்களில் கும்பகோணத்துக்குக் கிட்டேயிருக்கிற "திருவலஞ்சுழி" என்றே பெயர் பெற்ற ஸ்தலம் விசேஷமானது. அதனுடைய மஹிமையைக் காட்ட ஒன்று சொல்கிறேன்.

மஹாராஷ்டிராவில் கணபதி உபாஸனை அதிகம். ஆரம்ப ஸ்வாமியான பிள்ளையார். முடிவிலே வரும் ஸ்வாமியான ஆஞ்ஜநேயர் ஆகிய இருவருக்கும் அங்கே ரொம்ப வழிபாடு நடக்கிறது. பிரிட்டிஷ் கெடுபிடியின் போது நம் ஜனங்களை ஒன்று கூட்டவே திலகர் பிள்ளையாரை வைத்துத்தான் வழிகண்டு பிடித்தார். பிள்ளையார் சதுர்த்தியன்று பெரிசு பெரிசாக, கலர் கலராகப் பிள்ளையார் பொம்மைகள் பண்ணி ஊர்வலம் விடுகிறது என்று ஆரம்பித்து, இதனாலேயே பதினாயிரக்கணக்கான ஜனங்களைக் கூட்டம் கூட்டினார். மத விஷயம் என்பதால் வெள்ளைக்கார ராஜாங்கம் இதில் தலையிடவில்லை (நம்முடைய "சொந்த" ராஜாங்கம் என்று சொல்லப்படுவது ஏற்பட்ட அப்புறந்தான் ஹிந்து மதம் ஒன்றின் விஷயத்தில் மட்டும் ஸர்க்கார் ப்ரவேசித்து என்ன வேண்டுமானாலும் செய்யலாமென்றிருக்கிறது. இது வேறு விஷயம்.) திலக் நாளில் இப்படி "கணேஷ் சதுர்த்தி" என்ற பெயரில் ஜனங்களை கூட்டிய பின் அவர்களுக்கு, ஸ்வதந்திரப்பற்றை ஊட்டி தேசத்தலைவர்கள் பேசுவார்களாம் ! இப்போதும் பம்பாய் மாதிரி ஊர்களில் பிள்ளையார் சதுர்த்தியென்றால் ஒரே அல்லோல கல்லோலந்தான். இப்படிப்பட்ட மஹாராஷ்டிராவில் காணபதர்கள் பூர்வத்தில் நிறைய இருந்திருக்கிறார்கள்.

காணாபத்யம் என்பதாக கணபதியை முழு முதற்கடவுளாக வழிபடுகிற மார்க்கத்தைச் சேர்ந்தவர்களே காணபதர்கள். ஒரே வேதாந்த ஸமயத்தில் ஆறு பிரிவுகள். ஒரே நதியில் ஆறு துறைகள் மாதிரி. இதில் கணபதி உபாஸனையே மோக்ஷ உபாயமாகச் சொல்வது காணாபத்யம். குமாரஸ்வாமி (முருகன்) உபாஸனையைச் சொல்வது கௌமாரம். அம்பாள் - சக்தியின் உபாஸனையைச் சொல்வது சாக்தம். ஸூர்யனையே பரம்பொருளாகச் சொல்வது ஸௌரம். விஷ்ணுவைச் சொல்வது வைஷ்ணவமென்றும், சிவனைச் சொல்வது சைவமென்றும் தெரிந்திருக்கும். ஷண்மதங்கள் என்ற இந்த ஆறு உபாஸனா க்ரமங்களையும் சுத்தப்படுத்தி வைதிகமாக நிலைநாட்டியதாலேயே பகவத்பாதாளுக்கு (ஆதி சங்கரருக்கு) ஷண்மத ப்ரதிஷ்டாபனாசார்யர் என்று பெயர்.

இதில் ஒன்றான காணாபத்யம் அதிகம் அநுஷ்டானத்தில் இருந்த மஹாராஷ்டிராவில் "அஷ்ட விநாயகர்" கள் என்ற எட்டுப் பிள்ளையார்களுக்கான எட்டு க்ஷேத்ரங்கள் இருக்கின்றன. அவர்களில் "மயூரேசர்" என்ற பிள்ளையாருக்கும் அவர் இருக்கிற "மோர்காம்" க்ஷேத்ரத்துக்கும் ப்ரஸித்தி ஜாஸ்தி. "மோர்காம்" என்பது "மயூர க்ராமம்" என்பதன் திரிபு. பிள்ளையாரைச் சுற்றி

அவருடைய பரிவார தேவதைகள் இருக்க வேண்டிய க்ரமத்திலேயே மோர்காமைச் சுற்றிப் பரிவார தெய்வங்களின் கோயில்கள் இருக்கின்றன. மயூரம் என்பது தமிழில் மயில் என்றும், வடக்கத்தி பாஷைகளில் மோர் என்றும ஆகியிருக்கிறது. ஸுப்ரமண்யர்தான் மயில் வாஹனர் என்று நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம். புராணங்களின்படியும் தந்த்ர சாஸ்திரங்களின்படியும் நாம் மூஷிகவாஹனராகவே நினைக்கிற பிள்ளையாருக்கும் மயில் வாஹனத்தோடு ஒரு அவஸரம் (ரூப பேதம்) உண்டு. அவர்தான் மயூரேசர். மயூரேச க்ஷேத்ரமான மஹாராஷ்டிர மோர்காமின் க்ஷேத்ர புராணத்தில் நம் தமிழ்நாட்டுத் திருவலஞ்சுழியை உசத்திச் சொல்லி இருக்கிறது. ''தக்ஷிணாவர்த்தம்'' என்று இதற்கு அங்கே பெயர் கொடுக்கிறது. தக்ஷிண-வல; ஆவர்த்தம் - சுழி ; இந்த 'தக்ஷிணாவர்த்தம்'' தான் பிள்ளையாருடைய ராஜதானி, அதாவது Capital என்று சொல்லியிருக்கிறது.

திருவலஞ்சுழியில் சிவன் கோயிலில் ஒரு ஸந்நிதியாகத் தான் பிள்ளையாருடைய இந்த 'ராஜதானி' இருக்கிறது. இங்கேயுள்ள ஈச்வரனே ஞானஸம்பந்தரும் அப்பரும் பாடியிருக்கிறார்கள். ஆனால் ப்ரஸித்தியெல்லாம் பிள்ளையாருக்கே இருக்கிறது. இங்கே பிள்ளையார் இருக்கும் மண்டபம் ரொம்பவும் வேலைப்பாடு அமைந்தது. குறிப்பாக, அங்கேயிருக்கிற ஸலவைக்கல் பலகணியைச் சொல்ல வேண்டும்.

பழைய காலத்தில் கோயில் நிர்மாணிக்கிற சில்பிகள் வேலைகள் ஒப்புக் கொண்டு முச்சிலிக்கா தருகிறபோது, ஐந்து தினுஸான நிர்மாணங்கள் தவிர பாக்கியெல்லாம் தாங்கள் செய்து தருவதாகக் குறிப்பிடுவார்களாம். அந்த ஐந்து மட்டும் தங்கள் திறமைக்கு அப்பாற்பட்டது என்று விட்டு விட்டதாக அர்த்தம். ஆவுடையார் கோயில் கொடுங்கை, கடாரங் கொண்டான் மதில், தஞ்சாவூர் கோபுரம், திருவீழிமிழலை வௌவால் ஒட்டி மண்டபம் என்ற நாலோடு திருவலஞ்சுழிப் பலகணியும் ஐந்தாவதாக இந்த அற்புதங்களில் ஒன்ருக அந்த ஸ்தபதிகளால் சொல்லப் பட்டிருக்கிறது.

பதினாறு தூண்கள் போட்டு, நுட்பமாக வேலைப்பாடு செய்து இந்தப் பலகணி அமைக்கப்பட்டிருக்கிறது. ''ஷோடச கணபதி'' என்று பிள்ளையார் மூர்த்தங்களில் பதினாறைச் சொல்வதற்கேற்ப இங்கே பதினாறு த்வாரங்கள் இருக்கின்றன. பதினாறுதான் பூர்ணத்வம், ஷோடச கலா பூர்ணம் என்பது.

பூர்ணமான ப்ரணவ ஸ்வரூபமாகவே விளங்கும் வலம்புரி விநாயகரை தேவேந்த்ரன் பூஜை பண்ணியதால் தான் க்ஷீரஸாகரத்தில் அம்ருதம் திரண்டு வந்ததாம். பிள்ளையார் பால்ஏட்டினால் பண்ணினாற்போலவே வெள்ளை வெளேரென்று இருப்பார். வெண்ணை நிறத்தைக் கொண்டே அவருக்கு "ச்வேத விநாயகர்" என்று பெயர். அவரைத் தொடாமலே பூஜை பண்ண வேண்டும். சிவன் கோயில் பரிவார தெய்வம் மாதிரி இவர் இருந்தாலும் அங்கே ப்ரம்மோத்ஸவமே இவருக்குத்தான்; ஈச்வரனுக்கு இல்லை. திருவலஞ்சுழியில் இன்னொரு விசேஷம். ச்வேத விநாயகர் தும்பிக்கையை வலது பக்கம் சுழித்துக் கொண்டிருப்பது போலவே இங்கே காவேரியும் திரும்பி வலது பக்கமாகச் சுழித்து ஓடுகிறது!

காவேரிக்கும் விக்நேச்வரருக்கும் கிட்டின ஸம்பந்தமுண்டு. குடகு தேசத்தில், ஸஹ்ய பர்வதத்தில் அகஸ்தியர் கமண்டுலுவுக்குள் பொத்திப் பொத்தி வைத்துக் கொண்டிருந்த காவேரியைப் பிள்ளையார்தான் காக்காய் ரூபத்தில் வந்து கவிழ்த்து விட்டு, லோகோபகாரமான, புண்ய நதியாக ஓட வைத்தார். நம் தமிழ் நாட்டின் உடம்பு, உள்ளம் இரண்டையும் வளர்க்கிற காவேரியைக் கொடுத்தவர் என்பதற்காக பிள்ளையாரிடம் நாம் விசேஷமாக பக்தி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம்.

குடகிலிருந்து கர்நாடக தேசத்தைத் தாண்டித் தமிழ்நாட்டில் பாய்ந்த காவேரி கும்பகோணம் அருகில் ஒரு பிலத்துக்குள் மறைந்துவிட்டாளாம். அப்போது ஹேரண்டர் என்ற மஹரிஷி பரம கருணையோடு தம்மையே பலி கொடுத்துக் கொண்டாராம். உடனே காவேரி பிலத்துக்குள்ளே இருந்து பொங்கிக் கொண்டு வெளியிலே வந்து இந்தப் பிள்ளையார் க்ஷேத்ரத்தைப் ப்ரதக்ஷிணமாக, வலப்பக்கம் சுழித்துக் கொண்டு மேலே ஓடினாளாம்.

தலைக்காவேரியில் கன்னங்கரெலென்று காக்காயாக வந்தவர் இங்கே வெள்ளை வெளேரென்று காட்சி தருகிறார். "ப்ரணவ ஸ்வரூப வக்ர துண்டம்" என்கிறபடியே மூர்த்தியும் வலம்புரியாக இருக்க தீர்த்தமும் வலப்பக்கமாக ஓடுகிற பெருமை திருவலஞ்சுழிக்கு இருக்கிறது. வலம்புரி விநாயகரை - அவர் இடம்புரியாகக் கோயில் கொண்டிருக்கிற இடங்களிலும் ப்ரணவ ஸ்வரூபி என்றே புரிந்து கொண்டு - நாம் வலம் வந்து வணங்கி எல்லா நலமும் பெறுவோமாக!



உ

# விநாயகர்

தமிழ் நாட்டின் தனிப்பட்ட சிறப்பு எங்கு பார்த்தாலும் பிள்ளையார் கோயில்கள் இருப்பதேயாகும். "கோயில்" என்று பெயர் வைத்து விமானமும் கூரையும் போட்டுக் கட்டிடம் எழுப்ப வேண்டும் என்பது கூட இல்லாமல், அரச மரத்தடிகளிலே கூட வானம் பார்க்க அமர்ந்திருக்கும் ஸ்வாமி நமது பிள்ளையார். தெருவுக்குத் தெரு ஒரு பிள்ளையார் கோயில், நதிக் கரைகளிலெல்லாம் பிள்ளையார். மரத்தடிகளில் பிள்ளையார் என்றிப்படி இந்தத் தமிழ்தேசம் முழுவதும் அவர் வேறெந்த ஸ்வாமிக்கு இல்லாத அளவுக்கு இடம் கொண்டு அருள் பாலித்து வருகிறார். அவரைப் "பிள்ளையார்" என்றே அன்போடு கூறுவது நம் தமிழ்நாட்டிற்கே உரிய வழக்கம். சர்வலோக மாதா பிதாக்களாகிய பார்வதி பரமேச்வரர்களின் ஜேஷ்ட புத்திரர் அவர். பிள்ளை என்றால் அவரைத்தான் முதலில் சொல்ல வேண்டும். வெறுமே "பிள்ளை" என்று சொல்லக் கூடாது என்பதால் மரியாதையாகப் பிள்ளையார் என்று சொல்வது தமிழ் நாட்டுச் சிறப்பு.

"குமாரன்" என்றால் பிள்ளையார் என்றே அர்த்தம். பாரத தேசம் முழுவதிலும் குமாரன், குமாரஸ்வாமி என்றால் பார்வதி பரமேச்வரர்களின் இளைய பிள்ளையாகிய சுப்பிரமணியரையே குறிப்பிடும். தமிழிலும் "குமரக்கடவுள்" என்கிறோம். ஆனால் அவரைக் "குமரனார்" என்பதில்லை ; "குமரன்" என்று தான் சொல்வார்கள். மூத்த பிள்ளைக்கே மரியாதை தோன்றப் பிள்ளையார் என்று பெயர் தந்திருக்கிறோம்.

முதல் பிள்ளை இவர்; குழந்தைஸ்வாமி. ஆனாலும் இவரே எல்லாவற்றுக்கும் ஆதியில் இருந்தவர். பிரணவம் தான் எல்லாவற்றுக்கும் முதல். பிரணவத்திலிருந்துதான் ஸகல பிரபஞ்சமும் ஜீவராசிகளும் தோன்றின. அந்த பிரணவத்தின் ஸ்வரூபமே பிள்ளையார். அவரது ஆனைமுகம், வளைந்த தும்பிக்கை இவற்றைச் சேர்த்துப் பார்த்தால் பிரணவத்தின் வடிவமாகவே தோன்றும்.

குழந்தையாக இருந்து கொண்டே ஆதி முதலின் தோற்றமாக இருக்கிற பிள்ளையார் குழந்தை போல தோன்றினாலும் பக்தர்களை ஒரேடியாக கைதூக்கி உயர்த்தி விடுவதிலும் முதல்வராக இருக்கிறார். ஔவைப் பாட்டி 'ஒருத்தியின் உதாரணமே போதும். ஔவையார் பெரிய கணபதி உபாஸகி. பிரணவ ஸ்வரூபியான விநாயகரைப் புருவ மத்தியில் தியானித்துக் கொண்டு ஔவையார் யோக சாஸ்த்ரம் முழுவதையும் அடக்கியதான ''விநாயகர் அகவலை''ப்பாடியிருக்கிறாள். அதைப் பாராயணம் செய்தால் பரமஞானம் உண்டாகும். இந்த ஔவையாரைப் பற்றி ஒரு கதை உண்டு. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளும் சேரமான் பெருமாள் நாயனாரும் கைலாசத்துக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் ஔவையையும் உடன் அழைத்துப் போக எண்ணினார்கள். அப்போது ஔவை விக்நேச்வரருக்கு பூஜை பண்ணிக் கொண்டிருந்தாள். சீக்கிரம் பூஜையை முடித்துத் தங்களுடன் கைலாசத்துக்கு வருமாறு சுந்தரமூர்த்தியும் சேரமானும் பெருமாளும் அவளை அவசரப்படுத்தி அழைத்தார்கள். அவளோ, ''நீங்கள் போகிறபடி போங்கள். நான் என் பூஜையை வேகப்படுத்த மாட்டேன். விநாயக பூஜையே எனக்குக் கைலாசம்'' என்று சொல்லி விட்டாள். அவர்கள் அப்படியே கிளம்பி விட்டார்கள். ஔவை சாங்கோபாங்கமாகப் பூஜை செய்து முடித்தாள். முடிவில் பிள்ளையார் ப்ரசன்னமாகி அவளை அப்படியே தம் தும்பிக்கையால் தூக்கி ஒரே வீச்சில் கைலாசத்தில் கொண்டு சேர்த்து விட்டார் ! அவளுக்குப் பிற்பாடுதான் சுந்தரமூர்த்தியும், சேரமான் பெருமாளும் கைலாசத்தை அடைந்தார்கள். அந்த இரண்டு பேருக்கும் முன்னதாக, ஒரு சொடக்குப் போடுகிற நாழிகைக்குள் அவர் ஔவைப்பாட்டியைக் கைலாயத்தில் சேர்த்து விட்டார். பெரிய அநுக்ரஹத்தை அநாயாசமாகச் செய்கிற ஸ்வாமி விக்நேசுவரர்.

## தத்துவ மயமான விநாயகர்

விநாயக மூர்த்தியிலுள்ள ஒவ்வொரு சின்ன சமாசாரத்தைக் கவனித்தாலும் அதில் நிறையத் தத்துவங்கள் இருக்கின்றன.

பிள்ளையாருக்குத் தேங்காய் உடைப்பது எதற்காக ? விக்கிநேசுவரர், தம் அப்பாவான ஈச்வரனைப் பார்த்து, ''உன் சிரசையே எனக்குப் பலி கொடு'' என்று கேட்டு விட்டாராம். எல்லாவற்றையும் காட்டிலும் உயர்ந்தது எதுவோ அதைத் தியாகம் பண்ணினால் தான் மகாகணபதிக்குப் ப்ரீதி ஏற்படுகிறது. அவ்வளவு பெரிய தியாகம் பண்ணுவதற்குத் தயார் என்ற அறிகுறியாகத்தான்,

ஈச்வரனைப் போலவே **மூன்று கண்கள் உடைய** தேங்காயைச் சிருஷ்டித்து அந்தக் காயை **அவருக்கு** நாம் அர்ப்பணம் பண்ணும் படியாக ஈச்வரன் அநுக்கிரகித்தருள்கிறார்.

சிதறு தேங்காய் என்று உடைக்கிற வழக்கம் தமிழ் தேசத்துக்கு மட்டுமே உரியது. இப்படிச் சிதறிய துண்டுங்களில் யாருக்கு உரிமை என்றால் குழந்தைகளுக்குத்தான். இந்த உண்மை ஒரு குழந்தை மூலமாகத்தான் எனக்கே தெரிந்தது. அப்போது (1941) நான் நாகைப் பட்டினத்தில் சாதுர்மாஸ்ய விரதம் அநுஷ்டித்து வந்தேன். அங்கே கோயிலில் பிள்ளையாருக்கு நிறையச் சிதறுகாய் போடுவது வழக்கம். காயை உடைக்கவே இடம் கொடுக்காத அளவுக்குக் குழந்தைகள் ஒரே நெரிசலாகச் சேர்ந்து விடும். திபு திபு என்று அவை ஓடி வருவதில் என் மேல் விழுந்து விடப் போகின்றனவே என்று என் கூட வந்தவர்களுக்குப் பயம். அவர்கள் குழந்தைகளிடம் ''இப்படிக் கூட்டம் போடாதீர்கள், விலகிப் போங்கள்'' என்று கண்டித்தார்கள். அப்போது ஒரு பையன் 'டாண்' என்று, ''பிள்ளையாருக்குத் தேங்காய் போட்டு விட்டு, அப்புறம் எங்களை இங்கே வராதீர்கள் என்று சொல்ல **உங்களுக்கு** என்ன பாத்தியதை இருக்கிறது ? சிதறுகாய் போட்டால் அது **'எங்கள்'** பாத்தியதைதான். அதை எடுத்துக் கொள்ள நாங்கள் வரத்தான் செய்வோம்'' என்றான். அவன் பேசிய ஜோர், அதிலிருந்து உறுதியைப் பார்த்த போது தான் எனக்கே, 'வாஸ்தவம் தான், குழந்தை ஸ்வாமியின் ப்ரஸாதத்தில் குழந்தைகளுக்குத் தான் முழு பாத்தியதையும், என்று தெரிந்தது.

அகங்கார மண்டையோட்டை உடைத்தால் உள்ளே அமிருத ரஸமாக இளநீர் இருப்பதை இந்தச் சிதறுகாய் உணர்த்துகிறது.

கணபதியைக் காட்டிலும் சரீரத்தில் பருமனான ஸ்வாமி வேறு யாரும் இல்லை. சிரசு யானையின் தலை. பெரிய வயிறு. பெரிய உடம்பு. அவருக்கு 'ஸ்தூல காயர்' என்றே ஒரு பெயர். மலைபோல் இருக்கிறார். ஆனாலும் அவர் சின்னக் குழந்தை ! சரி, குழந்தைக்கு எது அழகு ? குழந்தை என்றால் அந்தப் பருவத்தில் நிறையச் சாப்பிடவேண்டும். உடம்பு கொஞ்சம் கூட இளைக்கக் கூடாது. ஒரு சந்நியாசி நிறையச் சாப்பிட்டுக் கொண்டு பெரிய சரீரியாக இருந்தால் அது அவருக்கு அழகல்ல. வயசாகி விட்டால் ராத்திரி உபவாசம் இருப்பார்கள். குழந்தை அப்படி இருப்பது அழகா ? குழந்தை என்றால் தொந்தியும் தொப்பையுமாகக் கொழு கொழுவென்று இருந்தால்தான் அழகு. நிறையச் சாப்பிடுவதுதான் அழகு. குழந்தைகள் நல்ல புஷ்டியாக இருக்க வேண்டும் என்பதை இந்தக் குழந்தைச் சாமியே காட்டிக்கொண்டிருக்கிறார். கையில் மோதகத்தை வைத்துக் கொண்டு.

இவரோ யானை மாதிரி இருக்கிறார். அதற்கு நேர் விரோதமான சின்னஞ் சிறு ஆகிருதி உடையது மூஞ்சூறு. இதை அவர் தம் வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். மற்ற ஸ்வாமிகளுக்காவது ஒரு மாடு, ஒரு குதிரை, ஒரு பட்சி என்று வாகனம் இருக்கிறது. இவரோ தாம் எத்தனைக்கு எத்தனை பெரிய ஸ்வாமியாக இருக்கிறாரோ, அத்தனைக்கு அத்தனை சின்ன வாகனமாக வைத்துக் கொண்டிருக்கிறார். சுவாமி எதை வாகனமாக வைத்துக் கொண்டாலும் வாகனத்தினால் சுவாமிக்குக் கௌரவம் இல்லை. சுவாமியால்தான் வாகனத்துக்குக் கௌரவம். வாகனத்துக்குக் கௌரவம் கொடுக்க, அதனுடைய சக்திக்கு ஏற்றபடி நெட்டிப் பிள்ளையார் மாதிரியாகக் கனம் இல்லாமல் இருக்கிறார். அதற்குச் சிரமம் இல்லாமல், ஆனால் அதற்கு மரியாதை, கௌரவம் எல்லாம் உண்டாகும்படியாகத் தம் உடம்பை வைத்துக் கொண்டிருக்கிறார். ஸ்தூலகாயரான போதிலும், 'பக்தர்கள் இருதயத்தில் கனக்காமல் லேசாக இருப்பேன்' என்று காட்டுகிறார்.

ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வோர் அங்கத்தில் அதிகக் கௌரவம் இருக்கும். சவுரிமான் என்று உண்டு. அதன் கௌரவம் வாலில்தான் இருக்கிறது. மயில் என்றால் அதற்குத் தோகை விசேஷம். தோகையை மயில் ஜாக்கிரதையாக ரட்சிக்கும். யானை எதை ரட்சிக்கும் ? தன் தந்தத்தை நீட்டி வெள்ளை வெளேர் என்று வைத்திருக்கும். இந்தப் பிள்ளையார் என்கிற யானை என்ன பண்ணுகிறது என்றால் அந்தக் கொம்பில் ஒன்றையே ஒடித்து, அதனால் மகாபாரதத்தை எழுதிற்று. தன் அழகு, கௌரவம், கர்வம் எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கிற ஒன்றைக் காட்டிலும், தர்மத்தைச் சொல்லுகிற ஒன்றுதான் பெரிது என்பதை இவ்விதம் இந்த யானை காட்டியது. நியாயத்துக்காக, தர்மத்துக்காக வித்தைக்காக எதையும் தியாகம் பண்ண வேண்டும் என்பதை தானே தந்தத்தைத் தியாகம் பண்ணிக் காட்டியிருக்கிறது. சுவாமிக்குக் கருவி என்று தனியாக ஒன்றும் வேண்டியதில்லை, எதையும் கருவியாக அவர் நினைத்தால் உபயோகித்துக் கொள்வார் என்பதற்கு இது உதாரணம். ஒரு சமயம் தந்தத்தாலேயே அசுரனைக் கொன்றார். அப்போது அது ஆயுதம். பாரதம் எழுதும் இப்போது அதுவே பேனா.

நமக்குப் பார்க்கப் பார்க்க அலுக்காத வஸ்துக்கள் சந்திரன், சமுத்திரம் யானை ஆகியன. இவற்றையெல்லாம் எத்தனை தடவை எத்தனை நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் அலுப்புச் சலிப்பில்லாத ஆனந்தம் பொங்கும். அதனால்தான் குழந்தை

ஸ்வாமி தன்னைப் பார்க்கிற ஜனங்களுக்கு எல்லாம், பார்க்கப் பார்க்க ஆனந்தம் எப்போதும் பொங்கிக் கொண்டிருக்கும்படியாக யானை உருவத்தோடு இருக்கின்றார். அது ஆனந்த தத்துவம் ; ஆராத ஆசையின் தத்துவம். அவர் பிறந்ததே ஆனந்தத்தில். பண்டாசுரன் விக்ன யந்த்ரங்களைப் போட்டு அம்பாளின் படை தன்னை நோக்கி வர முடியாதபடி செய்த போது, பரமேச்வரன் அவளை ஆனந்தமாகப் பார்த்தபோது, அவளும் ஆனந்தமாக இந்தப் பிள்ளையைப் பெற்றாள். அவர் விக்னயந்த்ரங்களை உடைத்து அம்மாவுக்கு சகாயம் செய்தார்.

அவர் பார்வதி பரமேசுவரர்களுக்குப் பிள்ளை. இந்த உலகத்துக்கே மூலத்திலிருந்து ஆவிர்ப்பவித்ததனால் அவரை நாம் ''பிள்ளையார்'' ''பிள்ளையார்'' என்றே விசேஷித்து அழைக்கிறோம்.

விக்நேசுவரருடைய அநுக்ரஹம் இருந்தால்தான் லோகத்தில் எந்தக் கார்யமும் தடையின்றி நடக்கும். தடைகளை நீக்கிப் பூரண அநுக்கிரகம் செய்கிற அழகான குழந்தைத் தெய்வம் பிள்ளையார். அவரைப் ப்ரார்த்தித்து, பூஜை செய்து நாம் விக்கினங்கள் இன்றி நல்வாழ்வு வாழ்வோமாக !



# குழந்தை ஸ்வாமி

## கிழவியும் குழவியும்

கிழப்பாட்டி ஒருத்தி, பாட்டி என்றால் காலை நீட்டிக் கொண்டு இருந்த இடத்திலேயே கிடப்பவள். ஆனால் இந்தப் பாட்டி அப்படி இல்லை. இவள் நின்ற இடத்தில் நிற்காமல் இந்தத் தமிழ்நாடு முழுக்கச் சுற்றிக் கொண்டே இருந்தாள். ஒரு குக்கிராமம் பாக்கியில்லாமல் ஊர் ஊராக, தெருத் தெருவாக ஓடிக் கொண்டேயிருந்தாள். அந்தப் பாட்டிக்கு அப்படி ஒரு உற்சாக சக்தி இருந்தது. பாட்டி விஷயம் இப்படி இருக்கட்டும்.

குழந்தை ஒன்று 'கஷ்டிக் முஷ்டிக்' என்று நல்ல ஆரோக்கியமாக இருக்கிற குழந்தை அது. குழந்தை என்றால் பொதுவாக என்ன பண்ணும் ? துள்ளி விளையாடும். ஒரு க்ஷணம்கூட இருந்த இடத்தில் இருக்காமல் 'துரு துரு' என்று ஓடிக் கொண்டேயிருக்கும். ஆனால் இந்தக் குழந்தை இதற்கு நேர்மாறுதல். உட்கார்ந்த இடத்தை விட்டு இது அசைவதில்லை.

வேடிக்கையான பாட்டி, வேடிக்கையான குழந்தை. குழந்தை மாதிரி பாட்டி ஓடிக் கொண்டிருக்கிறாள். பாட்டி மாதிரி குழந்தை இருந்த இடத்தைவிட்டு நகராமல் உட்கார்ந்திருக்கிறது. ஆனால் அந்தப் பாட்டி தள்ளாத வயதிலும் அத்தனை உற்சாகத்தோடு ஓடி ஆடிக் கொண்டிருந்ததற்கு இந்தக் குழந்தைதான் காரணம். இந்தக் குழந்தை கொடுத்த சக்தியினால்தான் அவள் அவ்வளவு காரியம் செய்தாள். இந்தப் பிள்ளை யார் ? ''பிள்ளை'' என்றாலே அவர்தான். மரியாதையாகப் ''பிள்ளையார்'' என்கிறோமே, அவர்தான் அந்தக் குழந்தை. யாராவது ஒருத்தர் இடத்தைவிட்டு நகராமல் இருந்தால் ''கல்லுப் பிள்ளையார் மாதிரி'' என்று சொல்வது வழக்கம்.

சகல உலகங்களுக்கும் தாய் தந்தையான பார்வதி பரமேச்வரர்களின் மூத்த பிள்ளை அவர். அதனால்தான் தமிழ்நாட்டில் அவரை ''பிள்ளையார்'' என்று சொல்கிறோம்.

மற்ற இடங்களில் இவரை கணேஷ் (கணேசர்) கணபதி என்பார்கள். சிவபெருமானின் படைகளுக்கு, பூதகணங்களுக்கு எல்லாம் பிள்ளையார்தான் தலைவர். ஈசர், பதி அதனால் கணேசர், கணபதி என்று பெயர். இவருக்கு மேலே தலைவர் யாரும் கிடையாது. எல்லாவற்றுக்கும் முந்தியவராக முதல்வராக, மேலாக இருப்பவர் அவர். அவருக்கு மேல் இன்னொரு தலைவர் (நாயகர்) இல்லை. அதனால் 'விநாயகர்' என்றும் பெயர். 'வி' என்பது சில சமயங்களில்

ஒன்றுக்கு எதிர்மறையானதைக் குறிப்பிடவும் வார்த்தைக்கு முதலில் வரும். இங்கே 'நாயகன் இல்லாதவர்' என்று எதிர்மறையாக வருகிறது. தமக்கு மேல் ஒரு நாயகன் இல்லாதவர் என்று அர்த்தம்.

அவர் செய்யாத அநுக்கிரஹம் இல்லை. குறிப்பாக நமக்கு வருகிற விக்கினங்களை யெல்லாம் அழிக்கிறவர் அவர் தான். ஆகையால் 'விக்நேசுவரர்' என்றும் அவரைச் சொல்கிறோம். எந்தக் கார்யத்துக்கும் தடை வராமல் இருப்பதற்காகவே முதலில் இவரைப் ப்ரார்த்திக்கிறோம். முதல் பூஜை இவருக்குத்தான்.

கஜமுகன், கஜராஜன் இப்படியெல்லாமும் அவருக்குப் பெயர் இருக்கிறது. யானை முகத்தோடு அவர் விளங்குவதால் இந்தப் பெயர்கள் வந்திருக்கின்றன. யானைக்குத் தேக பலம் மிகவும் அதிகம். ஆனாலும் அது சிங்கம், புலி போல் மற்றப் ப்ராணிகளை ஹிம்சிப்பதில்லை. பர்மா, மலையாளம் மாதிரி இடங்களில் ஜனங்களுக்காக யானைகள் தான் பெரிய பெரிய கார்யங்களைச் செய்கின்றன ; பிள்ளையாரும் இப்படித்தான் ரொம்ப சக்தி வாய்ந்தவர் ; ஆனாலும் அதைக் காட்டிக் கெடுதல் செய்யாமல் நமக்கெல்லாம் நன்மையே செய்து கொண்டிருப்பார். யானைக்கு புத்தி கூர்மை ஞாபக சக்தி எல்லாம் மிக அதிகம். பிள்ளையார் அறிவே வடிவானவர்.

யானை என்ன செய்தாலும் அழகாயிருக்கிறது. அது அசக்கி அசக்கி நடப்பது, சாப்பிடுவது, காதை ஆட்டுவது, தும்பிக்கையைத் தூக்குவது - எல்லாமே பார்க்க ஆனந்தமாக இருக்கிறது. அதன் முகத்தைப் பார்த்தாலே பரம சாந்தமாக இருக்கிறது. சின்னக் கண்களானாலும், அமைதியாக, அன்பாக இருக்கின்றன. மிருக வர்க்கத்தில் நாம் பார்த்துக் கொண்டே யிருப்பது யானையைத்தான். மனித வர்க்கத்தில் குழந்தை என்றால் அதைப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும் போல் தோன்றுகிறது. கெட்ட எண்ணமே இல்லாதது குழந்தை. ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருப்பது குழந்தை. அதைப்பார்த்தாலே நமக்கும் ஸந்தோஷமாக இருக்கிறது. பிள்ளையார் யானைக்கு யானை ; குழந்தைக்குக் குழந்தை. அதனால் அவரை எத்தனை பார்த்தாலும் போதும் என்ற திருப்தி உண்டாவதில்லை. கள்ளம் கபடம் இல்லாத குழந்தை மனசு அவருக்கு. குழந்தை போல் நல்ல உள்ளம் ; யானை மாதிரி தேக பலம், புத்தி கூர்மை ; எல்லாவற்றுக்கும் மேலாகத் தெவிட்டாத அழகு ; ஆனந்தம் பொங்கிக் கொண்டிருக்கிற ரூபம் .

சேராததெல்லாம் அவரிடம் ஸ்வபாவமாகச் சேருகிறது. கழுத்துக்குக் கீழே குழந்தை ; மனித வர்க்கம். மேலே முகம் யானை ; மிருக வர்க்கம். ஆனால் அவர் வாஸ்தவத்தில் தேவ வர்க்கம். தேவர்களுக்குள் முதல் பூஜை பெறும் தெய்வமாக இருக்கிறார்.

குழந்தையாக இருந்து கொண்டே மஹா பெரிய தத்வங்களுக்கு ரூபமாக (personification) இருக்கிற பிள்ளையாரிடம் பல தினுசான மாறு பாடுகள் (contrasts). இதிலே ஓர் அழகு வித்தியாசமானதெல்லாம் அவரிடம் சேர்ந்து இருப்பதனாலேயே அவரிடம் எல்லாம் ஐக்கியம் என்றாகிறது. உதாரணமாக, ஒரு கையில் ஒடிந்த தந்தம் என்றால் இன்னொரு கையிலே கொழுக்கட்டை வைத்திருக்கிறார். அதற்குள் தித்திப்பாக இருக்கிற வஸ்துவுக்குப் பெயர் பூர்ணம். பூர்ணம் என்றால் முழுமை. ஒரு கையில் இருக்கிற தந்தம் மூளி ; இன்னொன்றிலோ முழுமை. எல்லாம் நிறைந்த பூர்ணப் பொருள் பிள்ளையாரேதான். இதை அறிந்து கொள்வதுதான் பேரானந்தம். ஆனந்தத்துக்கு இன்னொரு பேர் மோதம், மோதகம். கொழுக்கட்டைக்கும் மோதகம் என்றே பேர்.

இன்னொரு மாறுபாடு : பிள்ளையார் குழந்தை. அதனால் பிரம்மசாரி. ஆனால் இவர் யானையாக வந்து வள்ளியை மிரட்டியதால்தான் அவள் ஸுப்ரம்மண்ய ஸ்வாமியைக் கல்யாணம் செய்து கொண்டாள் ! இன்றைக்கும் கல்யாணம் ஆக வேண்டுமானால் இந்தக் கட்டை பிரம்மசாரியை வேண்டிக் கொள்கிறார்கள். இதற்கு என்ன அர்த்தம் ? அவர் இருக்கிற நிலையில் அவருக்கு வேண்டாததையெல்லாம் கூட, அவர் நிலைக்கு மாறாக இருக்கிற நமக்குப் பரம கருணையோடு கொடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தூக்கி விடுகிறார்.

தாம் உட்கார்ந்த இடத்தை விட்டு அசையாமலே இருந்தாலும், பக்தர்களை ஒரே தூக்காகத் தூக்கி உச்சத்தில் சேர்த்து விடுவார். அவ்வையாரை இப்படித்தான் கடைசியில், தாம் இருக்கிற இடத்திலிருந்தே, தும்பிக்கையால் ஒரு தூக்கித் தூக்கிக் கைலாஸத்திலேயே கொண்டு சேர்த்து விட்டார்.

பிள்ளையாரைப் பார்க்கப் பார்க்க நமக்கு மேலே மேலே இப்படிப் பல தத்துவம் தோன்றுகிறது. இதுவும் நம் அறிவின் அளவுக்கு எவ்வளவு எட்டுகிறதோ அவ்வளவுதான். வாஸ்தவத்தில் நமக்குத் தெரிவதற்கும் அதிகமாக அவரிடம் பெருமைகள் அளவிட முடியாமல் இருக்கின்றன.

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்பார்கள். தெய்வமே குழந்தையாக வந்துவிட்டது பிள்ளையாரில். அதனால் அவரைக் குழந்தை ஸ்வாமியாகக் கொண்டாடுகிற தமிழ் நாட்டில், ஒரு மூலே முடுக்கு பாக்கி இல்லாமல் எங்கு பார்த்தாலும் உட்கார்ந்து கொண்டு அநுக்கிரஹம் பண்ணிக் கொண்டிருக்கிருர். அவர் செய்த அநுக்கிரஹத்தினால்தான் அந்தப் பாட்டி தமிழ்நாடு முழுவதும் ஓடிக் கொண்டிருந்தாள். அந்தப் பாட்டி யார் என்ருல், அவள் தான் அவ்வையார்.

பிள்ளையார் - அவ்வையார் அவ்வையாரைவிடத் தமிழ்நாட்டுக்கு உபகாரம் செய்தவர் இல்லே. ஆயிரம் காலமாக இந்தத் தேசத்தில் ஒழுக்கமும் பக்தியும் இருந்து வந்திருக்கிறது என்ருல், அது முக்கியமாக அவ்வையாரால்தான்.

மூளேக்கிறபோதே, குழந்தைகளாக இருக்கிறபோதே, நல்ல ஒழுக்கத்தையும், பக்தியையும் உண்டாக்கிவிட்டால் தான் பிறகு அவை நிலேத்து நிற்கும். தமிழ் நாட்டில் எத்தனேயோ மகாகவிகள். பக்தர்கள் இருந்திருக்கிருர்கள். ஆனால் அவர்கள் பாடியது முக்கியமாகப் பெரியவர்களுக்குத் தான். அவ்வையாருக்கு அவர்களேவிடக் கவிதாசக்தியோ, பக்தியோ குறைச்சல் இல்லே. அவள் ரொம்பப் பெரியவள் ; ஞானி ; யோக சாஸ்திரத்தில் கரை கண்டவள். ஆனாலும் அவள் குழந்தைகளே நல்லவர்களாக்க வேண்டும் என்பதில் முக்கியமாகக் கவனம் வைத்து, அவர்களுக்கு நல்ல குணங்களேயும், ஒழுக்கத்தையும், நீதியையும், தெய்வ பக்தியையும் போதனே செய்து பாடினாள்.

பேரக் குழந்தைகள் நன்ருக இருக்க வேண்டுமே என்ற கரிசனத்தோடு, ஒரு பாட்டி நல்லது சொல்வது மாதிரி அவ்வைப் பாட்டி அத்தனே தமிழ்க் குழந்தைகளுக்கும் உபதேசம் செய்தாள். அவளுடைய அன்பின் விசேஷத்தால் அவளுக்கப்புறம் எத்தனேயோ தலேமுறைகள் ஆனபிறகு இப்போதும் நாம் குழந்தையாகப் படிக்க ஆரம்பிக்கிறபோதே, அவளுடைய 'ஆத்திசூடி' தான் முதலில் வருகிறது. முதல் பூஜை பிள்ளையாருக்கு ; முதல் படிப்பு அவ்வையார் பாடல்.

இத்தனே ஆயிரம் வருஷங்களாக அவளுடைய வார்த்தை அழியாமல் தொடர்ந்து வருகிறது என்ருல் அதற்குக் காரணம் அவளுடைய வாக்கின் சக்திதான். பரம சத்தியமான ஒன்றை, நிறைந்த அன்போடு சொல்லிவிட்டால், அப்படிப்பட்ட சொல் ஆயிரம் காலமானாலும் அழியாமல் நிற்கிறது. அவ்வை இப்படி அன்போடு உண்மைகளே உபதேசித்தாள். நம்மில் கம்பர், புகழேந்தி

இளங்கோ போன்ற கவிகளைப் படிக்காதவர்கள் இருக்கலாம். ஆனால் அவ்வை வாக்கு ஒன்றுவது தெரியாதவர் இருக்க முடியாது.

அவ்வையாருக்கு இத்தனை வாக்குச் சக்தி எங்கேயிருந்து வந்தது ? வாக்குச் சக்தி மட்டும் இல்லை ; அவளுக்கு ரொம்பவும் தேச சக்தியும் இருந்திருக்கிறது. அதனால்தான், 'ஐயோ, தமிழ்க் குழந்தை ஒன்றுகூட நம் வாக்கு கிடைக்காமல் போகக் கூடாதே! ஒவ்வொரு குழந்தைக்கும் நாம் இந்த உபதேசங்களைக் கொடுக்க வேண்டுமே ! என்ற பரிவோடு அந்தப் பாட்டி ஒரு கிராமம் மிச்சம் இல்லாமல் ஓடி ஓடிப் போய், குழந்தைகளைத் தேடித் தேடி அவர்களுக்குத் தன் நூல்களைப் பரிந்து பரிந்து போதித்தாள். இந்தத் தேச சக்தி அவளுக்கு எப்படி வந்தது? பிள்ளையார்தான் அவளுக்கு இந்தச் சக்திகளையெல்லாம் கொடுத்தார்.

அவ்வையார் பெரிய பிள்ளையார் பக்தை. அந்தக் குழந்தை ஸ்வாமியை வேண்டிக் கொண்டுதான் அவள் சின்ன வயதிலேயே கிழவியாகிவிட்டாள். ஏன் அப்படிச் செய்தாள் ? வாலிபமாகவும், நடுத்தர வயதாகவும் இருந்தால் ஒருத்தனைக் கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் நடத்த வேண்டியிருக்கும். பக்திக்குக் குடும்ப வாழ்க்கை இடையூறு என்பதாலேயே, இடையூறுகளை எல்லாம் போக்கும் விக்நேசுவரரை வேண்டிக் கொண்டு கிழவியாகிவிட்டாள்.

ஸுப்ரமண்ய ஸ்வாமிக்குக் கல்யாணமாக ஸஹாயம் பண்ணின பிள்ளையார் இவளைக் கல்யாணமேயில்லாத பாட்டி ஆக்கினார் ! யாருக்கு எதைத் தர வேண்டுமோ அதைத் தருவார். இவளைச் சிறு பிராயத்திலேயே கிழவியாக்கி விட்டார். ஆனால் அவர் குழந்தை ஸ்வாமி அல்லவா? அதனால், இவள் தன்னிடம் மட்டும் எப்போதும் பார்த்தாலும் பக்தியாக இருந்தால் போதாது, இவளால் எல்லாக் குழந்தைகளும் நன்மை பெற வேண்டும் என்று நினைத்தார். ஒரு சின்னக்குடும்பம் வேண்டாம் என்று கிழவி ஆனவளை அத்தனை குழந்தைகளையும் கொண்ட பெரிய தமிழ்நாட்டுக் குடும்பத்துக்கே உபதேசம் செய்கிற பாட்டியாகி விட்டார்! அவளு ம் ஸந்தோஷமாக அந்தக் கார்யத்தைச் செய்தாள். மாறி மாறிப் பிள்ளையாரைத் தியானித்துப் பூஜிப்பதும் குழந்தைகளுக்கெல்லாம் உபதேசம் பண்ணுவதுமாகத் தன் வாழ்க்கையைக் கழித்தாள்.

அந்தப் பாட்டி அன்றைக்குச் சுற்றினாள். இன்றைக்கு நானும் எத்தனையோ சுற்றியிருக்கிறேன். அவள் தமிழ்நாடு மட்டும் சுற்றினாள். நான் இன்னும் மலையாளம், தெலுங்கு தேசம், பெங்கால், ஹிந்துஸ்தானி தேசம் என்று பல இடங்கள்

சுற்றியிருக்கிறேன். அங்கெல்லாம் நான் பார்க்காமல் இந்தத் தமிழ்நாட்டில் மட்டும் பார்க்கும் விசேஷம் என்னவென்றால், இப்படிச் சந்து பொந்து, மரத்தடி, ஆற்றங்கரை எங்கே பார்த்தாலும் ஒரு பிள்ளையார் உட்கார்ந்திருப்பதுதான்! தமிழ்நாட்டை விட்டுக் கொஞ்சம் தாண்டிப் போனால் கூட இப்படிக் காணோம்.

பிள்ளையார் தமக்குப் பெரிசாக ராஜகோபுரம், பிராகாரம் கட்டி கோயில் எழுப்ப வேண்டும் என்று நினைக்கவில்லை. சின்னதாக ஒரு ஸந்நிதி வைத்து விட்டாலும் அவருக்குப் போதும், தகரக் கொட்டகை போட்டால் கூட அவருக்குத் திருப்திதான்! அது கூட வேண்டாம்! ஒரு கட்டடமும் கூரையும் இல்லாமல் வானம் பார்க்க அரசமரத்தடியில் அவர் பாட்டுக்கு அமர்ந்து அநுக்கிரஹம் பண்ணிக் கொண்டிருப்பார். ஆற்றங்கரையில் எங்கே பார்த்தாலும் நன்றாக உட்கார்ந்து கொண்டு ஆனந்தமாக இருப்பார்.

இந்தத் தமிழ் தேசத்தில் மட்டும் ஏன் இந்த விசேஷம்? அவ்வையாருடைய விசேஷம்தான் இது. அவள் தமிழ் நாட்டில் ஓடாத இடமில்லை அல்லவா? அவள் போன இடத்திலெல்லாம் அவளுடைய இஷ்ட தெய்வமான பிள்ளையாரும் வந்து உட்கார்ந்துகொண்டு விட்டார்! தமிழ் நாட்டின் சிறப்புகள் என்று புஸ்தகங்களில் எத்தனையோ விஷயங்கள் போடுகிறார்கள். ஆனால் எனக்குத் தெரிகிற பெரிய சிறப்பு இங்கே எங்கு பார்த்தாலும் பிள்ளையார் கோயில் கொண்டிருக்கிறதுதான்.

**உலகுக்கெல்லாம் சொந்தமானவர்**

பிள்ளையார் ஏழை எளியவர்களுக்கெல்லாம் ஸ்வாமி. மஞ்சள் பொடியிலும், களிமண்ணிலும், சாணியிலும் கூட எவரும் ஒரு பிள்ளையாரைப் பிடித்துப் பூஜை செய்து விடலாம். அவர் எளிதில் ஸந்தோஷப்படுகிறவர். எங்கே எப்படி, எதில் கூப்பிட்டாலும் உடனே வந்து அந்தக் கல்லோ, களிமண்ணோ அதற்குள்ளிருந்து கொண்டு அருள் செய்வார். அவரை வழிபட நிறைய சாஸ்திரம் படிக்க வேண்டும் என்பதில்லை. ஒன்றும் படிக்காதவனுக்கும், அவன் கூப்பிட்ட குரலுக்கு வந்து விடுவார். மற்ற தேவதா விக்கிரஹங்களில் ஸாங்கோபாங்கமாகப் பிராணப் பிரதிஷ்டை என்று பண்ணி, அவற்றில் அந்தந்த தேவதைகளின் ஜீவ கலையை உண்டாக்குவதுபோல் பிள்ளையாருக்குப் பண்ண வேண்டுமென்பதில்லை. பாவித்த மாத்திரத்தில் எந்த மூர்த்தியிலும் அவர் வந்து விடுகிறார்' என்று சொல்வதுண்டு.

மற்ற ஸ்வாமிகளைத் தரிசனம் செய்வது என்றால், நாம் அதற்காக ஒரு காலம் பார்த்து, குளித்து முழுகி, அர்ச்சனை சாமான்கள்

வாங்கிக் கொண்டு கோயிலுக்குப் போக வேண்டியிருக்கிறது. கோயிலுக்குப் போனாலும் நேரே அந்த ஸ்வாமியிடம் போய்விட முடியாது. பிராகாரம் சுற்றிக் கொண்டு உள்ளே போக வேண்டும். அப்போதும் கூட ஸ்வாமிக்கு ரொம்பப் பக்கத்தில் போகக் கூடாது. கொஞ்சம் தள்ளித்தான் நிற்க வேண்டும். பிள்ளையார் இப்படி இல்லை. எந்த சமயமானாலும் சரி, நாம் ஆபீஸுக்கோ, ஸ்கூலுக்கோ, கடைக்கோ போய் வருகிறபோதுகூட தெருவிலே தற்செயலாகத் தலையைத் தூக்கினால், அங்கே ஒரு முக்கில் பிள்ளையார் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அவரைப் பார்த்த மாத்திரத்தில் நாமாக நெற்றியில் குட்டிக் கொண்டு ஒரு தோப்புக்கரணம் போட்டுவிட்டு நடையைக் கட்டுகிறோம். இதிலேயே நமக்குச் சொல்லத் தெரியாத ஒரு நிம்மதி, ஸந்தோஷம் உண்டாகிறது.

அவருக்குக் கோயில் என்று இருப்பதே ஒரு அறைதான். அதனால் ஒரு பேதமும் இல்லாமல் யாரும் கிட்டே போய்த்தரிசிக்க முடிகிறது. ஆலயப் பிரவேசச் சட்டம் (Temple entry Act) முதலான சண்டைகள் இல்லாமல் எல்லோருக்கும் அவர் ஸ்வாதீனம் ! பிராகாரங்கள் எல்லாம் தாண்டி உள்ளுக்குள்ளே உட்கார்ந்திருக்கிற ஸ்வாமிகளைவிட, இப்படி எங்கு பார்த்தாலும் நட்ட நடுவில் உட்கார்ந்திருக்கிற பிள்ளையார்தான் தப்பாமல் ஜனங்களை இழுத்துத் தோப்புக் கரணம் வாங்கிக்கொண்டு விடுகிறார்.

பிள்ளையார் வழிபாட்டுக்கென்றே சில அம்சங்கள் இருக்கின்றன. சிதறு தேங்காய் போடுவது, நெற்றியில் குட்டிக் கொள்வது, தோப்புக் கரணம் போடுவது ஆகியவை பிள்ளையார் ஒருவருக்கே உரியவை.

பிள்ளையார் சந்நிதியில், இரண்டு கைகளையும் மறித்து நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்ள வேண்டும். இப்படியே, இரண்டு கைகளையும் மறித்துக் காதுகளைப் பிடித்துக் கொண்டு, முட்டிக்கால் தரையில் படுகிற மாதிரி தோப்புக் கரணம் போட வேண்டும். இவை எதற்கு என்றால்?

யோக சாஸ்திரம் என்று ஒன்று இருக்கிறது. அதிலே நம் நாடிகளில் ஏற்படுகிற சலனங்களால் எப்படி மனஸையும் நல்லதாக மாற்றிக்கொள்ளலாம் என்று வழி சொல்லியிருக்கிறது. நம் உடம்பைப் பல தினுசாக வளைத்துச் செய்கிற அப்பியாஸங்களால், சுவாஸத்தின் கதியில் உண்டாக்கிக் கொள்கிற மாறுதல்களால் நம் உள்ளம் உயர்வதற்கான வழி அந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. நெற்றிப் பொட்டில் குட்டிக் கொள்வது,

தோப்புக்கரணம் போடுவது இவற்றால் நம் நாடிகளின் சலனம் மாறும்; மனஸில் தெய்விகமான மாறுதல்கள் உண்டாகும். நம்பிக்கையோடு செய்தால் பலன் தெரியும்.

குழந்தைகளுக்காக நீதிநூல்களைச் செய்த அவ்வையார் பெரியவர்களுக்குக் கூட எளிதில் புரியாத பெரிய யோக தத்துவங்களை வைத்து பிள்ளையார்மீதே ஒரு ஸ்தோத்திரம் செய்திருக்கிறாள். அதற்கு "விநாயகர் அகவல்" என்று பெயர். அளவில் சின்னதுதான் அந்த அகவல் ஸ்தோத்திரம்.

பிள்ளையாரை நினைக்கிறபோது அவ்வையாரையும் நாம் சேர்த்து நினைத்தால் இரட்டிப்பு அநுக்ரஹம் கிடைக்கும். "விநாயகர் அகவலை"ச் சொன்னால் இரண்டு பேரையும் ஒரே சமயத்தில் நினைத்ததாகும். எல்லோரும் இதைச் செய்ய வேண்டும். வெள்ளிக்கிழமை தோறும் பக்கத்திலுள்ள பிள்ளையார் கோயிலுக்குப் போய் "விநாயகர் அகவல்" சொல்லி விக்நேச்வரனுக்கு அர்ப்பணம் பண்ண வேண்டும்.

பிள்ளையாருக்கு எல்லோரும் சொந்தம். பிள்ளையார் எல்லோருக்கும் சொந்தம். ஏழை எளியவருக்கும் சாஸ்த்ரம் படிக்காத சாமானிய ஜனங்களுக்கும் கூடச் சொந்தம். மற்ற ஸ்வாமிகளின் நைவேத்திய விநியோகத்தில் பெரிய மநுஷ்யர்களுக்குத்தான் முதலிடம். பிள்ளையாரோ தமக்குப் போடுகிற சிதறுகாய் இவர்களுக்குப் போகாமல் ஏழைக் குழந்தைகளுக்கே போகும்படியாக வைத்துக் கொண்டிருக்கிறார் ! எல்லோரும் "அகவல்" சொல்லி அவரை வழிபட வேண்டும். பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் இதில் அதிக உரிமை உண்டு. அவ்வை பெண்ணாகப் பிறந்ததால், பெண்கள் எல்லோருக்கும் இந்த ஸ்தோத்திரத்தில் பாத்தியதை ஜாஸ்தி. அவள் குழந்தைகளுக்கு உபதேசித்த பாட்டி. விநாயகரும் குழந்தைத் தெய்வம். அதனால் அவளுடைய அகவலைக் குழந்தைகள் யாவரும், அவர் முன் பாடி ஸமர்ப்பிக்க வேண்டும். கொஞ்சம் 'கடமுட' என்றிருக்கிறதே, அர்த்தம் புரியவில்லையே என்று பார்க்க வேண்டாம். அர்த்தம் புரிந்தாலும் புரியாவிட்டாலும் 'அவ்வையின் வாக்குக்கே நன்மை செய்கிற சக்தி உண்டு' என்று நம்பி, அகவலைப் பொட்டை நெட்டுருப் போட்டுச் சொன்னாலும் போதும். அதனால் நாமும் க்ஷேமம் அடைவோம், நாடும் க்ஷேமம் அடையும்.

அழகான பெட்டி ஒன்று கிடைக்கிறது. அதற்குள் நிறைய ரத்தினங்கள் இருக்கின்றன. ஆனாலும் பெட்டியைத் திறக்கச் சாவியைக் காணோம். அதனால் பெட்டி வேண்டாம் என்று விட்டு

விடுவோமா ? ''சாவி கிடைக்கிறபோது கிடைக்கட்டும்'' என்று பெட்டியை வைத்துக் கொள்வோம் அல்லவா ? இப்போது பெட்டியை விட்டு விட்டால் பிறகு சாவி கிடைத்தாலும் ப்ரயோஜனமில்லேயே ? ''விநாயகர் அகவல்'' அப்படிப்பட்ட அழகான பெட்டி. அதற்குள்ளே யோக சாஸ்திர விஷயங்கள் ரத்தினம் மாதிரி உள்ளன. அவற்றைப் புரிந்து கொள்கிற புத்தி (சாவி) இப்போது நம்மிடம் இல்லாவிட்டாலும் பரவாயில்லே. இப்போதே பிடித்து, அதைச் சொல்லிக் கொண்டிருப்போம். சொல்லச் சொல்ல, தானே அர்த்தமும் புரிய ஆரம்பிக்கும். பிள்ளையாரே அது புரிவதற்கான அநுக்ரஹத்தைச் செய்வார்.

பிள்ளையார் எல்லோருக்கும் நல்லவர் ; எல்லோருக்கும் வேண்டியவர் ; சொந்தம். சிவ சம்பந்தமான லிங்கம், அம்பாள், முருகன் முதலிய விக்கிரஹங்களைப் பெருமாள் கோயிலில் பார்க்க முடியாது. ஆனால், பிள்ளையாரும் சிவ குடும்பத்தைச் சேர்ந்தவர் என்றாலும், விஷ்ணு ஆலயங்களில் கூடப் பிள்ளையார் மட்டும் இருப்பார். ''தும்பிக்கை ஆழ்வார்'' என்று அவருக்குப் பெயர் சொல்வார்கள். மதச் சண்டைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர்.

அதனால்தான் புத்தமதம், ஜைனமதம் எல்லாவற்றிலும் கூட அவரை வழிபடுகிறார்கள். தமிழ் நாட்டிலிருப்பது போல் மற்ற ராஜ்யங்களில் தடுக்கி விழுந்த இடமெல்லாம் விநாயகர் இல்லாவிட்டாலும் கூட, பாரத தேசத்திலுள்ள அத்தனே ஸ்தலங்களிலும் ஓரிடத்திலாவது அவர் இருப்பார். ''கன்யாகுமரியிலும் பிள்ளையார் ; ஹிமயத்தின் கேதாரத்திலும் ஒரு பிள்ளையார்'' என்று ஒரு கணபதி பக்தர் என்னிடம் பெருமைப்பட்டுக் கொண்டார்.

நம் தேசத்தில் மட்டும்தான் என்றில்லே. ஜப்பானிலிருந்து மெக்ஸிகோ வரை உலகத்தின் எல்லாத் தேசங்களிலும் விநாயகர் விக்கிரஹம் அகப்படுகிறது ! லோகம் பூராவும் உள்ள ஸகல நாடுகளிலும் அவரைப் பல தினுசான மூர்த்திகளில் வழிபடுகிறார்கள்.

அப்படி லோகம் முழுவதற்கும் சொந்தமாக இருக்கப் பட்டவரை நாம் எல்லோரும் தவறாமல் ஆராதிக்க வேண்டும். வசதி இருப்பவர்கள் அவருக்கு மோதகமும், மற்ற பக்ஷணமும், பழங்களும் நிறைய நிவேதனம் செய்து, குழந்தைகளுக்கு விநியோகம் பண்ண வேண்டும். அவர் குழந்தையாக வந்த ஸ்வாமி, குழந்தை என்றால் அது கொழு கொழு என்று இருக்க வேண்டும். அதற்கு நிறைய ஆகாரம் கொடுக்க வேண்டும். பிள்ளையாரின்

தொப்பை வாடாமல் அவருக்கு நிறைய நிவேதனம் செய்ய வேண்டும். வெள்ளிக் கிழமை தோறும் அவருக்குச் சிதறுகாய் போட்டுக் குழந்தைகளை ஸந்தோஷப்படுத்த வேண்டும். பெரியவர்கள் இவ்வாறு மற்றக் குழந்தைகளை மகிழ்வித்தால், ஈசன் குழந்தையான பிள்ளையாரும் மகிழ்ந்து, பெரியவர்களையும் குழந்தைகளாக்கித் தம்மோடு விளையாடச் செய்வார்.

பெரியவர்களானால் துக்கமும், தொல்லையும்தான். குழந்தை ஸ்வாமியோடு சேர்ந்து இந்தத் துக்கத்தைத் தொலைத்து அவரைப்போல் ஆனந்தமாகிவிட வேண்டும். அவர் எப்போதும் சிரித்த முகமுள்ளவர் 'ஸுமுகர்' 'ப்ரஸன்ன வதனர்' என்று பெயர் பெற்று எப்போதும் பேரானந்தத்தைப் பொங்க விடுபவர். நாம் உண்மையாகப் பக்தி செய்தால் நம்மை அப்படி ஆக்குவார்.

தமிழ்நாட்டின் பாக்கியமாகத் திரும்பிய இடமெல்லாம் அமர்ந்திருக்கும் அவரை நாம் எந்நாளும் மறக்கக் கூடாது. நாம் எல்லோரும் தவறாமல் பிள்ளையார் கோயிலுக்குப் போவது, தேங்காய் உடைப்பது 'விநாயகர் அகவல்' சொல்வது என்று வைத்துக் கொண்டால் இப்போதிருக்கிற இத்தனை ஆயிரம் கோயிலும் கூடப் போதாது; புதிதாகக் கட்ட வேண்டியிருக்கும்.

புதிதாகப் பிள்ளையார் கோயில், கட்டி ப்ரதிஷ்டை செய்வதில் வேடிக்கையாக ஒரு உலக வழக்கு இருக்கிறது. அதாவது புதிதாகப் பிள்ளையார் விக்கிரகம் அடிக்கக் கொடுக்காமல், ஏற்கனவே ஒரு கோயிலில் இருக்கிற பிள்ளையாரை திருடிக் கொண்டு வந்துதான் புதுக் கோயிலில் வைக்க வேண்டும் என்பார்கள். 'இது என்ன, சாதாரண விஷயங்களிலேயே திருட்டு கூடாது என்றால் தெய்வக் கார்யத்தில் போய்த் திருட்டுச் செய்யலாமா ? என்று தோன்றுகிறதல்லவா ? பிள்ளையாரைத் திருடலாம் என்றால்தான், ஒவ்வொரு கோயிலைச் சேர்ந்தவர்களும், 'நம் பிள்ளையார் எங்கே திருட்டுப் போய் விடுவாரோ?' என்ற பயத்தால் அவரை அல்லும் பகலும் கவனித்துக் கொள்வார்கள். இப்போது பல ஊர்களில் கவனக் குறைவால் 'ஸ்வாமியைக் காணோம்' என்று செய்தி வருகிற மாதிரி நடக்காமல் இருக்கும். அதற்காகவே இப்படி ஒரு திருட்டு வழக்கத்தைச் சொல்லி வருகிறார்கள் போலிருக்கிறது. பிள்ளையார் நினைப்பு நம் ஜனங்களுக்கு நீங்கவே கூடாது என்றுதான் இம்மாதிரியான ஏற்பாடுகளை நம் பெரியவர்கள் செய்து வைத்திருக்கிறார்கள். நமக்கு எப்போதும் துணை அவர்தான்.

நமக்கும் நாட்டுக்கும் உலகுக்கும் எல்லா க்ஷேமங்களும் உண்டாவதற்கு அவ்வையார் மூலம் பிள்ளையாரைப் பிடிப்பதே வழி.



# பெரிய இடத்துப் பிள்ளை

## குழந்தை வழியே உலகப் பெற்றோரிடம்

ஒருசின்னக் குழந்தையானால் கூட, அது ரொம்பவும் பெரிய மநுஷ்யாள் வீட்டுக் குழந்தையாயிருந்து விட்டால் அதனிடம் எல்லோரும் அதிகம் அன்புக் காட்டிக் கொஞ்சுவார்கள். அதற்கு பயப்படக்கூடச் செய்வார்கள். பெரிய மநுஷ்யாள் குழந்தை என்றால் அது ஏதாவது சண்டித்தனம் பண்ணினால் கூட மற்ற குழந்தைகளை அதட்டுகிற மாதிரி அதட்டாமல் அது கேட்பதை கொடுத்து விடுவார்கள். ஏன் என்றால் இந்தக் குழந்தை ரொம்பவும் செல்வாக்குள்ள அதன் தகப்பனாரிடம் ஒருத்தரைப் பற்றி ஏதாவது புகார் பண்ணி விட்டால் அவ்வளவுதான், அந்த ஆஸாமிக்கு இந்தத் தகப்பனார்க்காரரிடமிருந்து பெரிய உபத்ரவங்கள் வந்து சேரும். எவரும் தங்களையே திட்டினால் கூடப் பொறுத்துக் கொள்ளக்கூடும். போனால் போகிறதென்று விட்டுவிடலாம். ஆனால் காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்கிறார்களே, அப்படி ரொம்பவும் அருமையாக இருக்கப்பட்ட தங்கள் குழந்தையை யாராவது ஏதாவது சொல்லி விட்டார்களானால் கோபம் பொத்துக் கொண்டு வந்து விடும். இப்படி ஒரு பெரிய மநுஷ்யர் கோபித்துக் கொண்டு கிளம்பினால் ரொம்ப ஆபத்து அல்லவா ? அதனால்தான் "இது பெரிய இடத்துப் பிள்ளை" அப்பா ! இவனிடம் வம்புக்குப் போகப் படாது" என்று சொல்வது.

இதற்கு நேர் எதிராக ஒரு குழந்தையை மெச்சி விட்டால் அதன் தகப்பனருக்கு அவரையே மெச்சுவதைவிட ஸந்தோஷமாய் விடும் ; உச்சி குளிர்ந்துவிடும். இப்படி ஒரு பெரிய மநுஷ்யரை ப்ரீதி செய்துவிட்டால் ஸுலபமாக அவரிடமிருந்து பெரிய பெரிய லாபங்களைப் பெற்றுவிடலாம். பெரியவர்களை நேராக த்ருப்தி செய்வது கஷ்டம். குழந்தைகளையோ ரொம்பவும் எளிதில் திருப்திப் படுத்திவிடலாம். ஒரு சின்னச் சொப்பையோ சாக்லேட்டையோ காட்டி விட்டால் போதும். இல்லாவிட்டால் ஏதோ கொஞ்சம் கோணங்கி விளையாட்டுக் காட்டினால் அதிலேயே ஒரு குழந்தைக்குக் குஷி பிறந்து விடும். அந்தக் குழந்தையின் ஸந்தோஷத்தில் அதன் அப்பாவுக்கும் ஏக ஸந்தோஷம் உண்டாகிவிடும். தன் குழந்தையை ஸந்தோஷப்படுத்தினவருக்குத்

